# உள்ளே…

## என்னுரை - வ.ந.கிரிதரன் -

நான் இருப்புப் பற்றிய தேடல் மிக்கவன். அறிவியலூடு இருப்புப் பற்றிய தேடலில் ஈடுபடுவதில் எனக்குப் பெரு விருப்புண்டு. எம்மைச் சுற்றியிருக்கும் பிரபஞ்சக் காட்சிகள் , குறிப்பாக நட்சத்திரங்கள் கொட்டிக் கிடக்கும் இரவு வானம் இவற்றில் மெய்ம்மறந்து நிற்பதில் மிகுந்த ஈடுபாடு மிக்கவன் நான். விரிந்திருக்கும் இரவு வானும், ஆங்கு தெரியும் சுடர்களும், கோள்களும், உப கோள்களும், எரி நட்சத்திரங்களும் என் மனத்தைக் கிளர்ச்சியடைய வைக்கின்றன. இருப்புப் பற்றிய சிந்தனைகளைத்தூண்டி விடுகின்றன.

இவ்வகையில் அல்பேர்ட் ஐன்ஸ்ட்டைனின் சார்பியற் கோட்பாடுகள் என்மேல் ஏற்படுத்திய பாதிப்பும், ஆதிக்கமும் முக்கியமானது. வெளி, நேரம் , ஈர்ப்புச் சக்தி பற்றிய  அவரது சார்பியற் தத்துவங்கள் அறிவியற் துறையை மட்டுமல்ல, இருப்பு பற்றிய தத்துவத்துறையையும் மாற்றியமைத்தன என்பேன். குறிப்பாகக் காலவெளி என்னும் சொற்பதம் சிறப்பான சொற்றொடர். சிந்தையை விரிவடைய வைக்கும் தன்மை மிக்க சொற்றொடர்.

இருப்புப் பற்றிய தத்துவ, அறிவியற் சிந்தனைகள் என்னில் ஏற்படுத்திய பாதிப்புகளே 'காலவெளி - கண்ணம்மாக் கவிதைகள். இத்தொகுப்பில் கண்ணம்மாக் கவிதைகளுடன் இருப்புப் பற்றிய என் கேள்விகளை உள்ளடக்கிய மூன்று கவிதைகளும் இறுதியில் உள்ளடக்கப்பட்டுள்ளன. அவையாவன -  நவீன விக்கிரமாதித்தனின் 'காலம்!, எங்கோயிருக்கும் ஒரு கிரகவாசிக்கு மற்றும் 'ஐன்ஸ்டைனும் நானும் (ஒரு பிதற்றல்)'.

## 1. நாற்பரிமாண ஓவியத்தை இங்கு வரைந்தவர் யார் கண்ணம்மா!

விரியும் பெரு வெளி!
நாற்பரிமாண ஓவியத்தை இங்கு
வரைந்தவர் யார் கண்ணம்மா!
சொல்லம்மா!
என் கண்ணம்மா!

மேற்பரிமாண ஓவியங்கள்
மேலுமுண்டா கண்ணம்மா!
சொல்லம்மா!
என் கண்ணம்மா!

பற்பலப் பரிமாண ஓவியங்கள்
பல இருப்பின் கண்ணம்மா,
சமாந்தர ஓவியங்களுக்குள்
செல்லும் வழிகள்தாமுண்டா
கண்ணம்மா!
பயணிப்பதற்கு வழிகள்தாமுண்டா
கண்ணம்மா! சொல்லம்மா!
என் கண்ணம்மா!

பெருவெளியின் விரிதல்போலென்
சிந்தை விரிவெளிதன் விரிதலில்
முகிழ்க்கும் வினாக்கள் கண்ணம்மா!
உன்னால் அறிந்திட முடிகின்றதா
கண்ணம்மா!
சொல்லம்மா!
என் கண்ணம்மா!

இவ்விதம் இருப்பதில்,
இவ்விதமெண்ணி
இருப்பதிலுள்ள சுகம் நீ அறிவாய்தானே
கண்ணம்மா!
சொல்லம்மா!
என் கண்ணம்மா!
சொல்லம்மா!
என் கண்ணம்மா!

கண்ணம்மா!
வினாக்கள்
இவற்றை

இங்கெழுப்பியது முதலில் நீதானே
கண்ணம்மா!
சொல்லம்மா!
என் கண்ணம்மா!

உன் புரிதல் வேறு.
என் புரிதல் வேறு.
ஆயினும்
அவை நாணயமொன்றின்
பக்கங்கள்தாமே கண்ணம்மா.
சொல்லம்மா!
என் கண்ணம்மா!

எனக்கும் தெரியும்,
உனக்கும் புரியும்
அது எதுவென்று.
எது அது? அது
ஓவியத்துக்
காட்சிக் கூறுகள் நாமென்பது.
அதுதான் அது.
ஓவியத்துக் கூறுகள் நாம்
இல்லையா கண்ணம்மா?
சொல்லம்மா!
என் கண்ணம்மா!

ஓடுவதற்கு ஓரிடமுண்டா கண்ணம்மா?
ஒளிவதற்கு ஓரிடமுண்டா கண்ணம்மா?
ஓவியத்தெல்லைகளை
ஓடிக் கடப்பதற்கு
ஓரிடமுண்டா கண்ணம்மா?
சொல்லம்மா!
என் கண்ணம்மா!

## 2. காலவெளிக் கைதிகள்!

காலவெளியிடையே கண்ணம்மா உன்
கனிமனம் எண்ணி வியக்கின்றேன்.
காலவெளியிடையே கண்ணம்மா
கணமும் பறந்திட விளைகின்றேன்.
காலவெளிச் சிந்திப்பிலே கண்ணம்மா
களித்திட கணமும் எண்ணுகின்றேன்.
சூழலை மீறியே கண்ணம்மா அவன்போல்
சிந்திக்க விரும்புகின்றேன்.
காலமென்றொன்றில்லை கண்ணம்மா.
வெளியும் அவ்வாறே என்றான் கண்ணம்மா.
காலவெளி மட்டுமே கண்ணம்மா இங்கு
உண்மையென்றுரைத்தான்.
அவனறிவின் உச்சம் பற்றி கண்ணம்மா
பிரமித்துப்போகின்றேன்.
மனத்து அசை இன்னும் முடியவில்லை.
எப்பொழுதென்றாயினும் நீ கண்ணம்மா
எவ்விதம் அவனால் முடிந்ததென்று
எண்ணியதுண்டா ?
நான் எண்ணுகின்றேன் எப்பொழுதும் கண்ணம்மா.\
நான் வியந்துகொண்டிருக்கின்றேன் எப்பொழுதும்
கண்ணம்மா..

நான் எண்ணுவேன் எப்பொழுதும் கண்ணம்மா.
நான் வியந்துகொண்டிருப்பேன் எப்பொழுதும் கண்ணம்மா.
காலமற்ற வெளியில்லை கண்ணம்மா.
வெளியற்ற காலமில்லையா சொல்லம்மா.
காலம் நீயென்றால் கண்ணம்மா
வெளி நானன்றோ இல்லையா?
வெளி நானென்றால் கண்ணம்மா
காலம் நீயன்றோ இல்லையா?
காலவெளியன்றோ நாம் கண்ணம்மா!
காலவெளியன்றோ?

காலவெளியாகக் கண்ணம்மா – நாம்
உள்ளதெல்லாம் கண்ணம்மா
உண்மையா கண்ணம்மா? உண்மையா?
காலவெளிக் கோலமன்றோ கண்ணம்மா
ஞாலத்தில் நம்நிலை.
காலவெளிக் கடக்காக் கைதிகளா நாம் கண்ணம்மா?
கைதிகளா நாம்? ஆம்!
காலவெளிக் கைதிகளே நாம் கண்ணம்மா!

## 3. தர்க்கம் செய்வோமடி கண்ணம்மா! -

கண்ணம்மா,
நீ எப்போதும் கூறுகின்றாய்
நீ இருப்பதாக.
நீ என்னிலும் வேறாக இருப்பதாக.
நான் கூறுகின்றேன் கண்ணம்மா!
நீ எனக்குள் இருப்பதாக.
எனக்கு வெளியில் நீயில்லையென்று.,
நீ மறுத்துக்கூறுகின்றாய்
கண்ணா உன் கண்களை மூடிவிட்டாயா?
அறிவுக்கண்ணைப் பாவி கண்ணா.
பாவித்தால் நான் கூறுவது
புலப்படும்
என்று நீ கூறுவதை
எப்படி என்னால் ஏற்க முடியும்.
கண்ணம்மா, இருந்தாலும் உன்
குறும்புக்கு ஓர் அளவேயில்லையடி.
இப்பொழுது நீ பதிலுக்கு எடுத்துரைக்கின்றாய்
கண்ணா, உன்னால் உன்னை மீறி எவற்றையும்
காண முடியாது. ஏனென்றால் நீயொரு
குருடன். அறிவுக் குருடன்.
கண்ணம்மா, நீ இவ்விதம்
கிண்டலடிப்பதால்,
குறும்பு செய்வதால் என்னைக்
கேலிக்குள்ளாக்குவதால் நான் ஒருபோதும்
கலங்கமாட்டேனடி.
புறத்தில்
நீ இருப்பதை
நீ நிரூபிக்கும் வரையில்
நான்
குருடன்தான். ஞானக்
குருடன்தான்.
இப்பொழுது நீ சிரிக்கின்றாய்.
எப்பொழுதுமே நீ இப்படித்தான் கண்ணம்மா.
இருந்தாலும் உன்னுடன் ஓர் ஒப்பந்தம்
செய்தாலென்று தோன்றுகின்றது.
செய்வோமா கண்ணம்மா.
கண்ணா, எதற்கெல்லாம் ஒப்பந்தம்?
ஒப்பந்தம் வேண்டாம் தர்க்கம் செய்வோம்.
சரியா கண்ணா?
சரி கண்ணம்மா , தர்க்கமே
செய்வோம்.
நீ எனக்குள் இருப்பதைப்பற்றி

நீ எனக்கு வெளியில் இருப்பதைப்பற்றி,
நீ இருக்கும் பட்சத்தில்;
நீ இருப்பதை நான் அறிவது  எங்ஙனம் என்பது பற்றி,
நான் இருப்பதைப் பற்றி
நான் உனக்கு வெளியில் இருப்பது பற்றீ
நான் இவ்விதம் இருக்கும்  பட்சத்தில்
நான் இருப்பதை நீ எவ்விதம் புரிவாய் என்பது  பற்றி,
அவ்விதப் புரிதலில் உனக்கிருக்கும்
அவநம்பிக்கை பற்றி
தர்க்கம் செய்வோமடி கண்ணம்மா!
தர்க்கம் செய்வோமடி கண்ணம்மா.
கேள்விகள் கான்டிற்கு மட்டும்தானா கண்ணம்மா?
எனக்கும்தான்.
உனக்கும்தான்.

## 4. இருப்புப் பற்றியதோர் உரையாடல் கண்ணம்மாவுடன்! -

காலவெளி பற்றிக் கதைப்பதென்றால்,
உன்னுடன் கதைப்பதென்றால்
களி மிகும் கண்ணம்மா.
கூர்ந்த கவனிப்பும், தெளிந்த கருத்துகளும்,
தேர்ந்த சொற்களும்
உன்னுடனான என்உரையாடல்களை
உவப்புக்குரியவை ஆக்குவன.
உன் இருப்பு இருப்பு பற்றிய
தேடல்களின் முக்கிய படிகள்,
இருப்பு என்பது இருப்பவையா?
உளவியற் பிம்பங்களா?அன்றொரு தருணத்தில் கேட்டதை,
என்றொரு தடவை நீ கேட்டதை
இன்று நினைத்துப் பார்க்கின்றேன்.
அதை உன் இருப்புடன்
பொருத்திப் பார்க்கின்றேன்.
மென்முறுவல் ஓடி மறைவதையும்
பார்க்கின்றேன்.
ஆனால் தடுக்க முடியவில்லை.
உன்னுடனான உரையாடல்கள்
உன் இருப்பு பற்றிய வினாக்களுக்கு
உரிய விடைகளாக இருக்கக் கூடுமோ
என்று எண்ணியும் பார்க்கின்றேன்.
இருப்பு என்பது இருப்பதைப் பற்றியது
மட்டுமல்ல
இல்லாதவைப் பற்றியதும்தான்
என்பதைப்
புரிந்துகொள்ள வைத்தவை
உன் வினாக்கள், அவற்றுக்கான
விடைகள்.

இப்பொழுது நான் பதிலுக்கு
உன்னிடம் கேட்கின்றேன்.
நீ  இருக்கிறாயா? அல்லது இல்லையா?
இருக்கும் உன்னிடம் உரையாடுகின்றேனா?
அல்லது
இல்லாத உன்னிடம் உரையாடுகின்றேனா?
இதற்கு நீ பதிலளிக்கின்றாய்
இதழ்க்கோடியில் நகையொன்றை நழுவவிட்டபடி
'நான் இருப்பதும் உண்மையென்றால்
நான் இல்லாததும் உண்மைதான்.
இருக்கும் என் உரையாடல்கள் என்
இருப்பை உணர்த்தினால்.

இல்லாத என்னுடனான
உன் உரையாடல்களும்
என்
இருப்பின் விளைவுகள்தாம்.
கருத்தின் விளைவு என் இருப்பென்றால்
அதுவும் உன் அகத்தின் சித்திரமென்றும்
ஒரு பதிலுண்டல்லவா?
பொருளின் வடிவம் நானென்றால்
புறத்தின் உண்மை நானல்லவா?
கண்ணம்மா! நீ என்ன கூற வருகின்றாய்
என்று கேட்கின்றாயா கண்ணா?

இதனால்தான் கூறினேன்
கண்ணம்மாவுடனான என்
உரையாடல்கள் உவகையூட்டுவன.
ஏனென்றால்
அவை
இருப்பு இருப்பவை பற்றி மட்டுமல்ல
இல்லாதவை பற்றியும்தாம்.

## 5. காலவெளிச்சித்தனின் மடலொன்று!

ஒளிக்கூம்புக்குள்
விரிந்து ,
சுருங்கி,
மீண்டும் விரிந்து
கிடக்குமென் அண்டம்.

அடியே! அண்டத்தில்
நீ இங்கெங்கு சென்றிடினும்
உன்னால் ஒருபோதுமே என்னிடமிருந்து
மறைந்துவிடவே முடியாதடி.

ஏனென்று கேட்கின்றாயா?
நீயே அறிந்துகொள்
நீயே புரிந்துகொள்
என்று நானுனக்குக்கூறிடப் போவதில்லை.
உன் சிந்திக்குமறிவுக்கும் வேலை
வைக்கப்போவதில்லை
நானே  கூறுகின்றேன் விளக்கம் கண்ணம்மா!
உன்னால் புரிந்துகொண்டிட முடிந்தால்
புரிந்துகொள்.
ஏனென்றால்
இப்பிரபஞ்சத்துடனான என் உறவு
ஏன் உன் உறவும் கூடத்தான்
ஒருபோதுமே பிரிக்கப்பட முடியாதடீ.

இருந்தாலும் கவலையை விடு.
இன்னும் சிறிது விளக்குவேன்.
நீ, நான் , இங்குள்ள அனைத்துமே
துகள்களின் நாட்டியம்தாம்.
சக்தியின் வடிவம்தான்.
புரிந்ததா சகியே!

இன்னுமொன்று இயம்புவேன் கேள்.
இங்கிருந்து எத்தொலைவும்
ஏன் இட-வெளி மீறிப்
பயணிக்கும் காலவெளிச்சித்தன் நான்.

முடியுமா? சாத்தியமா? என்று நீ
கேட்கலாம். இல்லை கேட்பதென் காதுகளில்
விழுகின்றது.

'அறிவுணர்வு' வாகனமென்னிடமுள்ளதே.

ஏன் உன்னிடமுமுள்ளதே.
ஏன் அவர்கள் எல்லாரிடமும் உள்ளதே.
அதன் மூலம். ஆம்! அதன் மூலம்
என்னால் இட-வெளியை மட்டுமல்ல
அதற்கப்பாலும் பயணிக்க முடியும்.

அதனால்தான் கூறினேன் 'உன்னால்
எங்கு சென்றிடும்
என்னாலும் அங்கு வரமுடியுமென்று;.
நீ எஙகே! அடி கண்ணம்மா
நானும் அங்கே!

என் வெளியில் நானிருக்கின்றேன்.
என் வெளியில் நீயும் இருக்கின்றாய்.
உன் வெளியில் நீ  இருக்கின்றாய்.
உன் வெளியில் நானும் இருக்கின்றேன்.
என் வெளியில் அவர்களும் இருக்கின்றார்கள்.
அவர்கள் வெளிகளில் நாமும் இருக்கின்றோம்.

நீயிருப்பதும், அவர்கள் இருப்பதும்
என் வெளியில் என்றால்
எப்படி நீயும் அவர்களும்
சுயாதீனமாக இருக்க முடியும்

என்னை  மீறி.
உன் நிலையும் அதுதானே.
உன்னை மீறி
அவர்களை மீறி,
நானெப்படி இங்கிருக்க முடியும்?

கண்ணம்மா புரிந்ததா? விடை தெரிந்ததா?

என்னை மீறி நீயில்லை.
இவ்வுலகில்லை.
இங்கு எதுவுமேயில்லை.
அதனால் பிரிவுமில்லை.
பிரிவற்ற உறவினில்
அறிவு மிகுந்து பிரகாசிக்கின்றேன்.
'அறிவுணர்'வால் சுடர்விடுகின்றேன்.
கண்ணம்மா!  'அறிவுணர்'வால் சுடர்விடுகின்றேன்.

## 6. கண்ணம்மாவுடனோர் உரையாடல் காலவெளிப்புள் பற்றி... -

கண்ணம்மா!
காலவெளிப்புள்!
ஆம்! நீ ஒரு புள்தான் என்றேன்.
காலவெளிபுள்தான் என்றேன்.
அதற்கு நீ
'கொல்'லென்று நகைத்தாய்.
'பல்'லென்று முறுவலித்தாய்.
புள்ளென்றெனை அழைத்தாய்.
கள்ளா உனக்கென்ன துணிவென்றாய்.
கள்ளா என்றெனை அழைப்பதில்
கண்ணம்மா எனக்கும் சம்மதம்
என்றேன்.
ஏன் என்றாய்.
உள்ளங் கவர் கள்ளன் அதனால்
என்றேன்.
யார் உள்ளம் என்றாய்.
கண்ணம்மா,
உன் உள்ளம் என்றேன்.
மீண்டுமொரு
பல் தெரியக்
கொல்.

காலவெளி வானில்
சிறகடிக்கும்
காலவெளிப் புட்கள்!
நாம்
கண்ணம்மா.

நாம், வான், வரை,
வெள்ள நதி அனைத்துமே
புட்கள்தாம்.
காலவெளிப் புட்கள்
கண்ணா!

கண்ணும் காலவெளி.
காதும் காலவெளி.
காயமே காலவெளி.
கண்ணம்மா! இக்
காயமே காலவெளி.
காயமே காலவெளி.
காயமே காலவெளி.

கண்ணா!
உருவம் காலவெளி. சரிதான்.
உணர்வு?

கண்ணம்மா!
உன்னுடன் உரையாடல்
என்னில் எப்போதும்
இன்பமே.
வினாக்கள் மிகு
உரையாடல்களை,
நான் மிகவும் மதிக்கின்றேன்.

கண்ணா! போதும் உன்
பசப்பல்.
பகன்றிடு
பதிலை
என் கேள்விக்கு.

உன் கேள்விக்கு
என் பதில்
எதுவுமில கண்ணம்மா.
ஏன் எனில்
பரிமாணச் சிறைக்கைதிகள்
நாம் அதனால்.

ஆனால்... மேலே சொல் கண்ணா?

சக்தி = பொருள்.
உணர்வு = உருவம்.

கண்ணா! பதிலொன்றிருந்தும்
பதிலில்லை என்றாய். அது
பசப்பல் தானே. இல்லையா?

கண்ணம்மா!
இல்லையென்று நான் கூறின்
நீ
ஏற்கவா போகின்றாய்?
இல்லைதானே?

இவ்விதம் தொடரும் உரையாடல்கள்
கண்ணம்மாவுடன் என்றால்
இனிக்கத்தானே செய்யும்.

## 7. காலவெளிப்பயணியின் நெடும் பயணம்

என் வெப்ப மண்ணை,
மேல் விரியும்
இரவுவானை,
சுடரை, நிலவை
நான் நீங்கியது
நேற்றுத்தான் போல்
நினைவில் நிற்கிறது.

இன்று நிழலமர்ந்து
நினைவு அசை போடுமொரு
மாடுமாகினேன்.

ஒட்டகமாய், மாடாய்,
நள்யாமத்து நத்தாய்,
சுமைமிகு அத்திரியாய்,
உறுமீன் தேடி
வாடி நிற்குமொரு கொக்காய்,
இரைக்காய்ப் பொறுமைமிகு
முதலையாய்,
துருவத்துக் கட்டடக்காட்டுக்
கான் உயிருமாகினேன்.முடிவற்ற நெடும் பயணம்!

தங்குதற்கும், ஆறுதற்கும்
தருணங்களற்ற நெடும் பயணம்!

என்று முடியும்? எங்கு முடியும்?

நம்பிக்கையினை
நானின்னும் இழக்கவில்லை.

வழிச்சோலைகள், நீர்நிலைகள்
துருவப்பாலை வசங்கள் ஆயின..
பேய்த்தேர் எனவே போயின.
இருந்தும் சிந்தையின்னும்
இழக்கவில்லை நான்.

காலவெளிக் குழந்தை நான்
கண்ட கனவுகள்
நனவிடைதோய்தற் துளிகளாயின.
துருவப்பாலை ஒட்டகம் நான்.
இன்றோ சுடர் தேடுமொரு
துருவத்துப் பரதேசி!

அந்தமிலாவிருப்பு
நம்பிக்கைக் கனவுகள்
மிகப்பயணிக்குமொரு
காலவெளிப்பயணி
நான். பயணிக்கின்றேன்.
பயணிக்கின்றேன். பயணிக்கின்றேன்

## 8. அறிந்தால் அறிவியடி அருவியே!

கண்ணம்மா! அலைக்கூம்புக்குள்
விரிந்திருக்கின்றதடி நம்காலவெளி.
ஆம்!
கூம்புக்காலவெளியில் நாம்
கும்மாளமடிக்கின்றோமடி.
கூம்புக்கும் வெளியேயொரு யதார்த்தம்.
நாமறியாக் காலவெளி அது கண்ணம்மா!
கண்ணம்மா! நீ இவைபற்றி என்றாவது
கருத்தில் கொண்டதுண்டா? கூறடி!
இருப்புப்பற்றி இங்கு நினைப்பதிலுண்ட
இன்பம் வேறொன்றுண்டோ கண்ணம்மா.
காலவெளியடி கண்ணம்மா! நீ என்
காலவெளியடி கண்ணம்மா!

எல்லைகடந்து சிறகடிக்க எப்போதும்
விரும்புதடியென் மனம் கண்ணம்மா!
உன் மனமும் அப்படியாயடி!
காலவெளி கடந்து சிறகடிக்க முடியுமெனின்
கண்ணம்மா அக்கனவுலகம் காணத்துடிக்குதென்
மனமே. கண்ணம்மா என் மனமே!
ஒரு வினா! விடைபகிர் கண்ணம்மா!
நீ அலையா கண்ணம்மா!
நீ துகளா கண்ணம்மா!
நீ அலையென்றால் காலவெளியும் அலையன்றோ!
நீ துகளென்றால் காலவெளியும் துகளன்றோ!
அலையா? துகளா ? கண்ணம்மா!
அறிந்தால் அறிவியடி அருவியே!

## 9. மின்னலே! நீ மின் பின்னியதொரு பின்னலா ?

உண்மையென்று ஏதேனுமொன்றுண்டா ?
நான் பார்ப்பது, நீ இருப்பது இதுவெல்லாம்
உண்மையென்று எவ்விதம் நான் நம்புவது ?
நீயே சொல். நீ சொல்கின்றாய் நீ இருக்கிறாயென்று.உண்மையாக
நீ இருக்கின்றாயென்று.
என்னை விட்டுத் தனியாக எப்பொழுதுமே
இருப்பதாக நீ கூறுகின்றாய்.
எவ்விதம் நம்புவது.
ஆயிரம் மில்லியன் ஒளிவருடங்களிற்கு
அப்பாலிருந்து இருந்து வரும்ஒளிக்கதிர்களுக்கும்
உன்னிலிருந்து வரும் ஒளிக்கதிர்களுக்கும்
இடையிலென்ன வித்தியாசம் ?நேரத்தினைத் தவிர.

உனக்கும்எனக்குமிடையில்எப்பொழுதுமே ஒரு தூரம்
இருக்கத் தானே செய்கிறது. அது எவ்வளவுதான் சிறியதாக
இருந்த போதிலும்.

எப்பொழுதுமே ஒரு நேரம் இருக்கத் தானே செய்கிறது
கணத்தினொரு சிறுபகுதியாக என்றாலும்.

நீ இருப்பதாக நீ சொல்லுவதைக் கூட
நான் அறிவதற்கும் புரிவதற்கும் எப்பொழுதுமே இங்கு
நேரமுண்டு. தூரமுமுண்டு கண்ணே!
காண்பதெதுவென்றாலும் கண்ணே! அதனை அப்பொழுதே
காண்பதற்கு வழியென்றுண்டா ?

காலத்தைக் கடந்தாலன்றி ஞாலத்தில் அது
நம்மால முடியாதன்றோ ?

தூரமென்று ஒன்று உள்ளவரை நேரமொன்று இங்கு
இருந்து தானே தீரும் ? அது எவ்வளவுதான் சிறியதாக
இருந்த போதும்.

வெளிக்குள் காலத்திற்குள் கட்டுண்டதொரு இருப்பு
நம் இருப்பு கண்ணம்மா!

காலத்தினொரு கூறாய்
உன்னை நான் காண்பதெல்லாம் இங்கு
உன்னை நான் அறிவதெல்லாம்
மின்னலே! மின் பின்னியதொரு பின்னலா ?
உன்னிருப்பும் இங்கு மின் பின்னியதொரு
பின்னலா ? என் கண்ணே!

## 10. காலவெளி மீறிய கவிஞனடி கண்ணம்மா!

கண்ணம்மா!
நேற்று -இன்று - நாளை என்று
காலத்தின் ஒரு திசை பயணத்தில்
மீளுதல் சாத்தியமற்றதா? ஆயின்
'அறிவுணர்'வுக்கு அது இல்லை. ஆம்!
அது இல்லை. எது?
ஆம்! அதுதான். அதுதான்.ஆம்!
அது இல்லை.
தயக்கமெதுவற்று அதனால் தங்குதடையின்றிப்
பயணிக்க முடியும்.
நேற்று - இன்று - நாளை
காலத்தின் அர்த்தமற்றதொரு நிலை
'அறிவுணர்'வுக்குண்டு.
குவாண்டம் நுரையில் கிடக்கும் இருப்பில்
நேரத்துக்கும் அர்த்தமுண்டோ?
அங்கு அனைத்துமே சம காலத்தில்
இருப்பன. அறிவாயா கண்ணம்மா!
காலமே காலமாகி விட்ட நிலைதான்
குவாண்டம் நிலை. ஆம் ! அந்த நிலை.
என் 'அறிவுணர்'வு கொண்டு
என்னால் எங்கும் பயணிக்க முடியும் கண்ணம்மா!
உனக்கது புரியுமா?

காலவெளிச்சட்டங்களைக் காவிச்செல்லும்
காலவெளிப் பிரபஞ்சத்தில்
காலவெளி மீறிப்பயணிக்க என்னால்
முடியுமடி கண்ணம்மா!
காலைதனை நீ அழகுபடுத்திய
காலவெளிச்சட்டத்துக்குள் கூட
என்னால் இன்றும் பயணிக்க முடியமடி
என் 'அறிவுணர்'வின் துணைகொண்டு.
காலவெளியில் ஒரு திசையில் பயணிக்கும்
பயணங்களை மீறிடும் பக்குவம் அல்லது
பலம் 'அறிவுணர்'வுக்குண்டு.
புரியுமா கண்ணம்மா!

காலவெளியை வளைப்பேன் கண்ணம்மா
என் 'அறிவுணர்'வினால் என்றால் நீ
நகைக்கக்கூடும்/.
ஆயின் அதுவோருண்மை.
நீயும் அறியக்கூடும் அறிவின் துணைகொண்டு.
காலத்தை வரையறுக்கும்

ஆம் ஒரு திசையில்
காலவெளியில் கண்ணம்மா
காலவெளி மீறிடுதற்கு உதவிடும்
அறிவுணர்வே! நீ வாழி!
அறிவுணர்வு மிகுந்து, காலவெளி மீறி,
காலமழித்துப் பயணிக்குமெனக்கு
களிப்பன்றி வேறுண்டோ கண்ணம்மா!
நான்
காலவெளி மீறிய கவிஞனடி கண்ணம்மா!
ஆம்!
காலவெளி மீறிய கவிஞனே நானடி கண்ணம்மா!

## 11. காலவெளிக்காட்டி வல்லுனன்!

காலவெளிச் சட்டங்களைக் கோத்து
உருவானதிந்த இருப்படி கண்ணம்மா!
இவ்விருப்புமொரு காலவெளிப் படம்
என்பதையுணர்வாயாயடி நீ!
என்னாசையொன்றுள்ளதென்பேன்.
என்னவென்று நீ அறியின் நகைக்கக்கூடும்.
ஒருபோதில் ,உணர்வுகள் கிளர்தெழுந்த
பருவத்தினொரு போதில்
உனைப்பார்த்த உணர்வுகளுளவே.
அவ்வுணர்வினைப் பிரதிபலிக்கும் காட்சியுமுளவே.
அப்போது கண்ணம்மா! அதிகாலைநேரம்.
ஆடியசைந்து நீ வந்தாய் பொழுதின் எழிலென.
நினைவுள்ளதா? இருக்கிறதெனக்கு.
மார்புற நூல்தாங்கி, முகம் தாழ்த்தி
நடந்து வந்தாய்; அது உன் பாணி.
நிலம்பார்த்து நடக்குமுனக்கு
நடப்பதற்கு,
நேரெதிர்க் காட்சிகள்
தெரிவதெப்படி என்று வியப்பதுண்டு அப்போது.
இருபுறம் பிரிகுழல் இடைவரை
இருந்தசைய ,
பொட்டிட்ட வதனத்தில் நகையேந்தி நீ'
நடந்துவருமெழிலில் பொழுது சிறக்கும்.
ஒருபோதில் வழக்கம்போல் அசைந்து சென்றாய்
அதிகாலைப்பொழுதொன்றில்.
அவ்விதம் சென்று சந்தி திரும்புகையில்
ஓரப்பார்வைக்கணை தொடுத்துச் சென்றாய்.
நினைவிருக்கிறதா? ஆனால் எனக்கு
இருக்கிறதடி.
அக்கணத்தைச் சிறைப்படுத்தி ஆழ்மனத்தினாழத்தே
பத்திரப்படுத்தி வைத்துள்ளேன்.
அதற்கு எப்போதுமில்லையடி
விடுதலை/ ஆயுள் தண்டனைதான்.
இருக்கும் வரை அதனாயுள் அங்குதான்.
ஆசைபற்றிக் கூறியபின் அலம்பலெதற்கு\
என்று நீ கேட்கின்றாய் என்பதும்
புரிகின்றதடி கண்ணம்மா!
திரையிலோடிவிட்ட காட்சிகளை மீண்டும்
'ஓடவிட்டு, ஓடிவிட்ட காட்சிகளிலொன்றிக்
கிடப்பதில்லையா கண்ணம்மா! அதுபோல்
காலவெளிக் காட்சிகளை ஓடவிட்டாலென்ன?
ஆம்! மீண்டும் ஓடவிட்டாலென்ன?

என்று நாம் சிந்துப்பதுண்டு கண்ணம்மா!
இவன் சித்தம் சிதைந்ததுவோ என்று நீ
சிரித்தல் கூடும். நன்றாகச் சிரி.
சித்தம் சிதைந்த சிந்தனையின் விளைவல்ல
கண்ணம்மா இது.
சித்தச் செழிப்பின் விளைச்சலடி இது.
குவாண்டத்திரையில் இருப்புக்குப்
பல நிலைகள் ஒரு கணத்திலுள்ளதை
அறிவாயாயடி கண்ணம்மா!
அறியின் என் சித்தச் சிறப்பினை உணர்வாய்.
காலவெளித்திரையில்
காலவெளிச்சட்டங்களை
இருந்த காலம் நோக்கி ஓட்டிடும்
ஆற்றல் மிக்கவனிவன் என்பதை
நீ உணரின் அதிசயித்துப்போவாயடி.
காலவெளித்திரையில்
காலவெளிக்காட்டி இயந்திரத்தை
இயக்குபவன் நானடி கண்ணம்மா.
முன்னோக்கி, பின்னோக்கி எனப்
பல்நோக்கில்
இயக்குவதில் வல்லவன் நானடி.
ஆம்!
காலவெளித்திரையில் இருப்புக்காட்சிகளை
முன், பின் நோக்கி ஓட்டுவதில்
நிபுணத்துவம் பெற்ற வல்லுனனடி கண்ணம்மா
நான்.

## 12. நவீன விக்கிரமாதித்தனின் 'காலம்'!

எழுத்தாளர் மாலன் சாகித்திய அகாதெமிக்காக 'அயலகத் தமிழ்க் கவிதைகளின் தொகுப்பு -'புவி எங்கும் தமிழ்க் கவிதை' என்னும் கவிதைத்தொகுப்பினைத் தொகுத்துள்ளார். 22 நாடுகளில் வசிக்கும் தமிழ்க் கவிஞர்களின் 70 கவிதைகள் கொண்ட தொகுப்பு இது. மேற்படி தொகுப்பில் எனது இககவிதையான . "நவீன விக்கிரமாதித்தனின் 'காலம்'" கவிதையும் இடம் பெற்றுள்ளது.

உள்ளிருந்து எள்ளி நகைத்தது யார்?
ஒவ்வொரு முறையும் இவ்விதம்
நகைப்பதே உன் தொழிலாயிற்று.

விரிவெளியில் படர்ந்து கிடக்கும்
உன் நகைப்போ ,
நீ விளைவிக்கும் கோலங்களோ,
அல்லது உன் தந்திரம் மிக்க
கதையளப்போ
எனக்கொன்றும் புதியது அல்லவே.

இரவுவானின் அடுக்குகளில்
உனது சாகசம் மிக்க
நகைப்பினை உற்றுப் பார்த்திடும்
ஒவ்வொரு இரவிலும்,
நட்சத்திரச் சுடர்களில்,
அவற்றின் வலிமையில்
உன்னை உணர்கின்றேன்.
எப்பொழுதுமே இறுதி வெற்றி
உனக்குத்தான்.
எப்பொழுதுமே உன்காட்டில்
மழைதான்.
அதற்காக
மனந்தளர்வதென் பண்பல்ல.
ஆயின்
உன்னை வெற்றி கொள்ளுதலும் என்
பேரவாவன்று.பின்
உனைப் புரிதல்தான்.

ஓர் எல்லையினை
ஒளிச்சுடர் உனக்குத்
தந்துவிடும் பொருள் அறிந்த
எனக்கு
அவ் எல்லையினை மீறிடும்
ஆற்றலும், பக்குவமும்
உண்டு; புரியுமா?

வெளியும், கதியும், ஈர்ப்பும்
உன்னை, உன் இருப்பினை
நிர்ணயித்து விடுகையில்
சுயாதீனத்துடன்
பீற்றித் திரிவதாக உணரும்
உன் சுயாதீனமற்ற,
இறுமாப்புக்கு
அர்த்தமேதுமுண்டா?

இடம்,
வலம் ,
மேல்,
கீழ்.
இருதிசை, நோக்கு கொண்ட
பரிமாணங்களில் இதுவரையில்
நீ
ஒருதிசையினைத் தானே காட்டி
புதிருடன் விளங்குகின்றாய்?

உன் புதிரவிழ்த்துன்
மறுபக்கத்தைக் காட்டுதலெப்போ?

இரவி ,
இச் சுடர் இவையெலாம்
ஓய்வாயிருத்தலுண்டோ? பின்
நான் மட்டுமேன்?

நீ எத்தனை முறைதான்
உள்ளிருந்து
எள்ளி நகைத்தாலும்
மீண்டும் மீண்டும்
முயன்று கொண்டேயிருப்பேன்.

நீ
போடும் புதிர்களுக்கு
விளக்கம் காணுதற்கு
முயன்று கொண்டேயிருப்பேன்.

வேதாளங்களின் உள்ளிருந்து
எள்ளி நகைத்தல் கண்டும்
முயற்சியில்
முற்றுந் தளராதவன் விக்கிரமாதித்தன்
மட்டும்தானா?

## 13. எங்கோயிருக்கும் ஒரு கிரகவாசிக்கு

நான் பிரபஞ்சத்தில் அல்லது பிரபஞ்சங்களில் எம்மையொத்த, கீழான அல்லது மேலான உயிர்கள் இருக்கும்  என்பதைத் திடமாக நம்புபவன். அவற்றின் பரிமாணங்கள் எம்மைப்போல் முப்பரிமாணங்களுக்குள் அகப்பட்டவையாக இருக்கத்தேவையில்லை என்பதையும் நம்புகின்றேன். அவை நாம் உருவாக்கப்பட்ட இரசாயனப்பொருட்கள் மூலம் உருவாகியிருக்க வேண்டிய அவசியமும் இல்லையென்பதையும் திடமாக நம்புபவன். 'எங்கோயிருக்கும் ஒரு கிரகவாசிக்கு' என்னுமிக் கவிதை எண்பதுகளின் ஆரம்பத்தில் என் குறிப்பேடொன்றில் முதன் முதலில் எழுதப்பட்டது. கனடாவிலிருந்து வெளியான தாயகம் பத்திரிகையில் வெளியானது. பின்னர் எனது கவிதைத்தொகுதிகளான எழுக அதிமானுடா, ஒரு நகரத்து மனிதனின் புலம்பல் ஆகிய தொகுப்புகளிலும் உள்ளடக்கப்பட்டுள்ளது.

முகமில்லாத மனிதர்களிற்காகவும்
விழியில்லாத உருவங்களிற்காகவும்
கவிதைத் தூது விடுப்பர். ஆயின், யான்
அவர்களிற்கல்ல நண்பா! உனக்குத்தான்
அனுப்புகின்றேனிச் செய்திதனை.
உன்னை நான் பார்த்ததில்லை.
பார்க்கப் போவதுமில்லை.
உனக்கும் எனக்குமிடையிலோ
ஒளியாண்டுச் தடைச்சுவர்கள்.
‘காலத்தின் மாய ‘ வேடங்கள்.
ஆயின் நான் மனந்தளர்ந்திடவில்லை.
மனந்தளர்ந்திடவில்லை.
மனந்தளர்ந்திடவில்லை.
நிச்சயமாய் நானுனை நம்புகின்றேன். எங்கேனுமோரிடத்தில்
நீ நிச்சயம் வாழ்ந்துகொண்டு தானிருக்கின்றாய். ஆம்!
வாழ்ந்துகொண்டு தானிருக்கின்றாய்.
காடுகளில் , குகைகளில் அல்லது கூதற்குளிர்படர்வரைகளில்
உன்
காலத்தின் முதற்படியில்…
அல்லது
விண்வெளியில் கொக்கரித்து
வீங்கிக் கிடக்கும் மமதையிலே..

சிலவேளை
போர்களினாலுந்தன் பூதலந்தனைப்
பொசுக்கிச் சிதைத்தபடி அறியாமையில்…

ஒருவேளை
அதியுயர் மனத்தன்மை பெற்றதொரு
அற்புதவுயிராய்…

ஆயினும் உன்னிடம் நான்
அறிய விரும்புவது ஒன்றினையே..
'புரியாத புதிர்தனைப் புரிந்தவனாய்
நீயிருப்பின்
பகர்ந்திடு.

காலத்தை நீ வென்றனையோ ?
அவ்வாறெனின்
அதையெனக்குப் பகர்ந்திடு.
பின் நீயே
நம்மவரின் கடவுள்.
காலத்தை கடந்தவர் தேவர், கடவுளென்பர்
நம்மவர்.

இன்னுமொன்று கேட்பேன்.
இயலுமென்றா லியம்பிடு.
இவ்வாழ்வில் அர்த்தமுண்டோ ?
இதனை நீ அறிந்தனையோ ?
உண்டெனில் அர்த்தம் தானென்ன ?

சிலர்
அர்த்தமற்ற வாழ்வென்பர்.
யான்
அவ்வாறல்லன்.

அர்த்தம்தனை நம்புபவன். ஆயினும்
அதனையிதுவரை அறிந்திலேன்.
அதனை நீ அறிந்திடின்
அதனையிங்கு விளக்கிடு.

அது போதும்!

அது போதும்!

## 14. ஐன்ஸ்டைனும் நானும் (ஒரு பிதற்றல்)!

[ அண்மையில் அடிப்படைத் துகள்களிலொன்றான நியூட்டிரினோக்கள் ஒளியை விட வேகமாகச் செல்வதாக ஆய்வு முடிவுகள் தெரிவிப்பதாக இத்தாலிய விஞ்ஞானிகள் அறிவித்திருந்தார்கள். இன்னும் இம்முடிவு முற்று முழுதாக ஏற்றுக்கொள்ளப்படவில்லை. இதற்கு முன்னர் மேலும் பல பரிசோதனைகள் மேலும் பலரால் செய்யப்பட வேண்டும். இத்தகையதொரு சூழ்நிலையில் மார்ச் 6, 1983. இல் நான் குறிப்பேட்டில் எழுதிவைத்த கவிதையொன்றான 'ஐன்ஸ்டைனும் நானும் (ஒரு பிதற்றல்)' என்னும் கவிதையினை ஒருகணம் நினைவு கூர்தல் பொருத்தமானது. இக்கவிதை ஏற்கனவே 'பதிவுகள்', 'திண்ணை' ஆகிய இணைய இதழ்களில் வெளிவந்தது. அத்துடன் அண்மையில் பதிவுகளிலும் 'ஒருங்குறி' எழுத்தில் மீள்பிரசுரம் செய்யப்பட்ட கவிதையாகும். மேற்படி பரிசோதனை முடிவுகளான அடிப்படைத் துகள்களிலொன்றான நியூட்டிரினோக்கள் ஒளியை விஞ்சும் வேகத்தில் செல்வது நிரூபிக்கப்பட்டால் , மேற்படி கவிதையை ஒரு தீர்க்கதரிசனமிக்கதொரு கவிதையாகவும் கொள்வதற்கு சாத்தியமுண்டு என நீங்கள் கூறினால் அதிலெனக்கு ஆட்சேபனையேதுமில்லை.' ]

நானொரு பைத்தியமாம். சிலர்
நவில்கின்றார். நானொரு கிறுக்கனாம்.
நான் சொல்வதெல்லாம் வெறுமுளறலாம்; பிதற்றலாம்.
நவில்கின்றார். நவில்கின்றார்.
ஏனென்று கேட்பீரா? நான் சொல்வேன். அட
ஏனெழுந்தீர்? நீருமெனை நினைத்தோரோ 'கிறுக்கனென'.
ஆதிமானுடத்திலிருந்தின்றைய மானுடம்' வரையில்
வரலாறுதனை
அறிந்திடப் போகின்றேன் அப்படியே அச்சொட்டெனவே
என்றதற்கியம்புகின்றார் எள்ளி நகைக்கின்றார் இவரெலாம்.
நான் சொன்னதெல்லாம் இதுதான். இதுதான். இதுதான்:
'நுண்ணியதில் நுண்ணியதாய், மிக நுண்ணியதாயுளவற்றினை
நோக்கிடும் வலுவிலொரு தொலைகாட்டி சமைத்து
ஒளி விஞ்சிச் சென்றுவிடின்
ஆதிமானுடத்தினொளிதனையே
அட நான் முந்திட மாட்டேனா என்ன. பின்
வரலாறுதனை அறிந்திட மாட்டேனாவொரு
திரைப்படமெனவே'. என்றதற்குத்தான் சொல்லுகின்றார்
கிறுக்கனாமவை உளறலாம்; பிதற்றலாம்.
'ஒளி வேகத்தில் செல்வதென்றாலக்கணத்தில்
நீரில்லையும் உடலில்லை. நீளமெலாம் பூச்சியமே.
நான் சொல்லவில்லை. நம்ம ஐன்ஸ்டைன் சொல்லுகின்றார்'
என்றே
நவில்கின்றார்; நகைக்கின்றார் 'நானொரு கிறுக்கனாம்'.
நியூட்டன் சொன்னதிற்கே இந்தக் கதியென்றால்
நாளை ஐன்ஸ்டைன் சொன்னதிற்கும் மாற்றம் நிகழ்ந்திடாதோ?
அட நான் சொல்வேன் கேட்பீர். நானுமிப் பிரபஞ்சந்தனையே

சுற்றிச் சுற்றி வருவேனென்றன் விண்கலத்திலவ்வேளை
செகத்தினிலிவ் வாழ்வுதனின் அர்த்தம்தனைச்
செப்பிவைப்பேன்.
நல்லதிவையெலாம் கிறுக்கல், பிதற்றல், உளறலென்பவரெல்லாம்
நவின்றிடட்டுமவ்வாறே. அதுபற்றியெனக்கென்ன கவலை.
எனக்கென்ன கவலையென்பேன்.

## இதுவரை வெளியான வ.ந.கிரிதரன் நூல்கள்

1. மண்ணின் குரல் (நாவல், கவிதை, கட்டுரைத் தொகுப்பு),
2. எழுக அதி மானுடா! (கவிதைத்தொகுப்பு),
3. அமெரிக்கா (நாவல், சிறுகதைகளின் தொகுப்பு),
4. நல்லூர் ராஜதானி நகர அமைப்பு (ஆய்வு)
5. மண்ணின் குரல் ( நாவல்களின் தொகுப்பு) ,
6. குடிவரவாளன் (நாவல்) ,
7.. அமெரிக்கா (நாவல், திருத்திய இரண்டாவது பதிப்பு.)
8. கட்டடக்கா(கூ)ட்டு முயல்கள் (சிறுகதைத்தொகுப்பு) ,
9> வ.ந.கிரிதரன் கட்டுரைகள் ,
10. ஒரு நகரத்து மனிதனின் புலம்பல் (கவிதைத்தொகுப்பு) ,
11. நவீன விக்கிரமாதித்தன் (நாவல்)

நல்லூர் ராஜதானி நகர அமைப்பு ஆய்வு நூல் மற்றும் இவரது சிறுகதைகள் சிங்கள மொழிக்கு எழுத்தாளர் ஜி.ஜி.சரத் ஆனந்தவினால் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. இவரது படைப்புகள் பல அமேசன் - கிண்டில் தளத்தில் மின்னூல்களாகக் கிடைக்கின்றன.

கணையாழி (1995 - 2000 தொகுப்பு, ஞானம் சஞ்சிகையின் ' ஈழத்துப்புலம்பெயர் இலக்கியத்தொகுப்பு', ' பனியும் பனையும்' தொகுப்பு , அமரர் வெங்கட் சாமிநாதன் பற்றிய வாதங்களும், விவாதங்களும் தொகுப்பு ,'வடக்கு வாசல் 'சஞ்சிகையின் இலக்கிய மலர், ஆழி பப்ளிஷர்ஸ் வெளியிட்ட ஆண்டு 'தமிழ்க்கொடி' மலர் ஆகியவற்றில் இவரது படைப்புகள் இடம் பெற்றுள்ளன. எழுத்தாளர் சுஜாதா அறக்கட்டளையும் ஆழி பப்ளிஷர்ஸும் இணைந்து நடத்திய அமரர் சுஜாதா அறிவியல் புனைகதைப் போட்டியில் வட அமெரிக்காவுக்கான விருதினைப் பெற்ற அறிவியற் சிறுகதை 'நான் அவனில்லை'. இச்சிறுகதை ஆழி பதிப்பகம் வெளியிட்ட ‘சுஜாதா நினைவுப் புனைவு 2009’ , அறிவியற் புனைகதைத்தொகுப்பிலும் இடம் பெற்றுள்ளது. விகடனின் பவளவிழா ஆண்டில் இவரது 'பல்லிக்கூடம்' முத்திரைக் கதையாக வெளியானது.

## வெளியான அமேசன் - கிண்டில் மின்னூல்கள். இவை பதிவுகள்.காம் வெளியீடுகள்.

1. வ.ந.கிரிதரன் பாடல்கள்
2. வ.ந.கிரிதரனின் அணிந்துரைகள்
3. அமெரிக்கா!: அமெரிக்கத் தடுப்பு முகாம் அனுபவம்!
4. வ.ந.கிரிதரனின் கட்டுரைகள் (தொகுதி ஒன்று)
5. வ.ந.கிரிதரனின் 'கணையாழி'க் கட்டுரைகள்
6. ஒரு நகரத்து மனிதனின் புலம்பல்!: வ.ந.கிரிதரனின் தமிழ்க் கவிதைத் தொகுப்பு!
7. அருச்சுனனின் தேடலும் அகலிகையின் காதலும் (நாவல்)
8. அண்டவெளி ஆய்வுக்கு அடிகோலும் தத்துவங்கள்: வ.ந.கிரிதரனின் அறிவியற் கட்டுரைகள், சிறுகதைகள்
9. நவீன கட்டடக்கலைச் சிந்தனைகள்!
10.வன்னி மண்: - என் பால்யத்தின் பிரதிபலிப்பு. (நாவல்)
11. பால்ய காலத்துச் சிநேகிதி! (நாவல்)
12. நல்லூர் ராஜதானி நகர அமைப்பு (திருத்திய இரண்டாம் பதிப்பு)
13.குடிவரவாளன்: நியூயோர்க் மாநகரத் தமிழ் அகதி அனுபவம்! (நாவல்)
14. மண்ணின் குரல்: - கனடாவில் வெளியான முதலாவது தமிழ் நாவல். - (நாவல்)
15. கணங்களும் குணங்களும் (நாவல்)
16. வ.ந.கிரிதரனின் கட்டுரைகள் (தொகுதி இரண்டு)
17. இன்று புதிதாய்ப் பிறந்தேன் (வ.ந.கிரிதரன் பாடல்கள் தொகுப்பு 2
18. என்னை ஆட்கொண்ட மகாகவி (மகாகவி பாரதியார் பற்றிய கட்டுரைகள்)
19. அழியாத கோலங்கள் (தொகுப்பு ஒன்று)
20. அழியாத கோலங்கள் ( தொகுப்பு இரண்டு)

## ஆங்கில நூல்கள் (மின்னூல்களாக) - மொழிபெயர்த்தவர் - லதா ராமகிருஷ்ணன்.

1. An Immigrant  (Novel)
2. America (Novel)
3. Nallur Rajadhani City Layout

## வ.ந.கிரிதரன்



தற்போது கனடாவில் வாழ்ந்து வரும் எழுத்தாளர் வ.ந.கிரிதரன் இலங்கையைச் சேர்ந்த தமிழ் எழுத்தாளர். வவுனியா மகாவித்தியாலயம், யாழ் இந்துக்கல்லூரி ஆகிய பாடசாலைகளில் கல்வி கற்ற இவர் , மொறட்டுவைப் பல்கலைக்கழகத்தின் கட்டடக்கலைப் பட்டதாரி. "டொராண்டோ' சென்டனியல் கல்லூரியில் இலத்திரனியற் பொறியியல் துறையில் பட்டம் , தகவற் தொழில் நுட்பம் நுட்பத்துறையில் பல்வேறு கல்வித் தகைமைகளைப் பெற்றவர். இலங்கையிலிருந்த காலத்தில் தன் எழுத்துலக வாழ்வினை ஆரம்பித்த புகலிடத்தில் தொடர்ந்து எழுதி வருகின்றார். பதிவுகள் என்னும் இணைய இதழினை 2000 ஆம் ஆண்டிலிருந்து ஆசிரியராகவிருந்து நடாத்தி வருகின்றார்.

இவரது படைப்புகள் இலங்கை, தமிழகம் மற்றும் புகலிடத்தமிழர்கள் வெளியிட்ட சஞ்சிகைகள், பத்திரிகைகளில் வெளியாகியுள்ளன. தமிழக ஆய்வரங்குகளில் இவரது புகலிடப்புனைகதைகளைப் பற்றிய ஆய்வுக்கட்டுரைகள் சமர்ப்பிக்கப்பட்டுள்ளன. தமிழகப்பல்கலைக்கழகங்களில் இவரது படைப்புகளைப்பற்றி முனைவர் மற்றும், முதுகலைத் தத்துவம் கற்கை நெறிகளுக்காக மாணவர்கள் ஆய்வுகள் செய்திருக்கின்றார்கள். 'பொந்துப்பறவை'கள் என்னும் சிறுகதை சிங்கப்பூர் கல்வி அமைச்சினால் தமிழ் மாணவர்களுக்கான பாடத்திட்டமொன்றில் உள்ளடக்கப்பட்டுள்ளதும் குறிப்பிடத்தக்கது. 'அமெரிக்கா' அமெரிக்கன் கல்லூரியின் (தமிழ்நாடு) பாடத்திட்டத்திலுள்ளது.

ஆனந்த விகடனின் பவள விழாப்போட்டி, எழுத்தாளர் சுஜாதா அறக்கட்டளை மற்றும் ஆழி பப்ளிஷர்ஸ் இணைந்து நடாத்திய உலக அளவிலான அறிவியற் சிறுகதைப்போட்டி ஆகியவற்றில் பரிசுகளைப்பெற்றுள்ளன. கனடாத் தமிழ் இலக்கியத் தோட்டத்தின் இலக்கியச் சாதனைக்கான இயல் விருது 2022 பெற்றவர்.